ஸ்ரீ வேங்கடேச

# ஸுப்ரபாதம்

(ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களாசாஸனங்களுடன்)



ச்ரியஃ காந்தாய கல்யாண நிதயே நிதயேர்த்திநாம்|
ஸ்ரீ வேங்கட நிவாஸாய ஸ்ரீநிவாஸாய மங்களம்||




விலை: 50 காசு.

திருமலை திருப்பதி தேவஸ்தான செயலாட்சித்தலைவர்
திரு. பி.வி.ஆர்.கே. பிரஸாத், ஐ.ஏ.எஸ்.,
அவர்களால் வெளியிடப்பட்டது.
1979

ஸ்ரீ:

ஸ்ரீ வேங்கடேச

# ஸுப்ரபாதம்

(ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களாசாஸனங்களுடன்)




திருமலை திருப்பதி தேவஸ்தான செயலாட்சித்தலைவர்
திரு. பி.வி.ஆர்.கே. பிரஸாத், ஐ.ஏ.எஸ்.,
அவர்களால் வெளியிடப்பட்டது.
1979

# முன்னுரை.

——(*)——

தெய்வமே இல்லையென்பர் சிலர். இருக்கின்றது ஆயின் அது கோயிலில் ஓர் குறிப்பிட்ட உருவத்தில் இருக்கின்றது என்பதில்லை யென்பர் சிலர். நம்போன்ற விக்ரஹாராதகர்கட்கு இருவரும் ஒருவரே. 'தெய்வம் இல்லை' யென்பவர்களை ஆஸ்திகவாதம் செய்து நம்மால் சீர்திருத்த முடியும். அதுபோல் விக்ரஹாராதனவாதம் செய்து, 'தெய்வம் விக்ரஹத்தில் இல்லை' யென்பவர்களையும் சீர்திருத்த முடியும். ஆனால் அவ்வாறு செய்வதற்கு நமக்கு அனுகூலமான சூழ்நிலை யொன்று இருக்க வேண்டும். அதுதான் விருப்பு வெறுப்பில்லா நிலை. அது தான் இக்காலத்திலில்லை.

உண்மையில் தூங்குகின்றவனை யெழுப்பிவிடலாம். தூங்குவதாகப் பாசாங்கு செய்பவனை அவ்வாறு எளிதில் எழுப்பிவிடல் முடியாது. 'தெய்வமில்லை, சிலையிலில்லை.' என்று உண்மையிலேயே நம்பிவிட்டவனை, விருப்பு வெறுப்பில்லாத நடுநிலையிலுள்ளவனை நாம் நல்வழிக்கு எளிதில் திருப்பலாம். தெரிந்து வாதம் செய்பவனைத் திருப்பமுடியாது. அதனால் தோல்வியுறுகின்றோம்.

ஆனால் திருவேங்கடமுடையான் அத்தகைய மூர்க்கனையும் அடக்கி ஆட்கொள்கிறான். மூடர்களையும் மயக்கி நல்வழியில் செலுத்துகிறான். வாழ்நாளில் ஒருமுறை திருவேங்கடமுடையான் திருமுன்னிலையில் சில நிமிஷங்கள் நின்று ஸேவித்தவன் ஒருவனும் நாஸ்திக வாதத்தைத் திரும்பிப் பார்த்ததில்லை. ஒவ்வொருவனையும் தன் முன்னிலைக்கு வரவழைத்து வணங்கச் செய்து வேலைக்குக் கூலி கொடுப்பது போல் கோரிய பயன்களைக் கொடுப்பது என்ற முறையைவிட்டு அவரவர் செய்த நற்செயலான சில புண்

லியங்களுக்காகச் சிற்சில சிறு பயன்களைக் கொடுத்து நம்பிக்கையை யூட்டித் தன்னிடமழைத்துத் தன் திருமேனியின் அழகாலும் தன் குணங்களாலும் தன் பக்தர்களின் உயர்நிலையைக் காட்டியும் மயக்கி நிலையான ஆஸ்திகத்தை ஊட்டிவிடுகிறான். தீராத நோய் வாய்ப்பட்டவர்கள், பெரும் விபத்தில் சிக்கிக் கொண்டவர்கள் முதலியவர்களின் கனவில் தோன்றிக் கஷ்டத்தை நீக்கி அவர்களை நல்வழிப்படுத்தித் தன் கோயிலுக்கு அழைத்து நிலையான பக்தர்களாக்கி விடுகிறான்.

வெகு தூரத்திலிருந்து திருமலைக்கு வருபவர், ஸ்வாமி புஷ்கரிணியில் நீராடித் தூயராய் விஸ்வரூபதர்சன சமயத்தில் கோயில் உள்ளே சென்று திருவேங்கடமுடையான் திருமுன்பு நிற்பவர், அப்பொழுது அங்கு ஸேவிக்கப்படும் ஸ்ரீ வேங்கடேச ஸுப்ரபாதம், ஸ்ரீ வேங்கடேச ஸ்தோத்ரம், ஸ்ரீ வேங்கடேச ப்ரபத்தி, ஸ்ரீ வேங்கடேச மங்களா சாஸனம் என்னும் இந்நான்கு ஸ்தோத்ரங்களையும் காலையில் விச்வரூபதர்சன காலத்தில் சாந்தமான சூழ்நிலையில் கேட்டு மெய் மறக்கின்றனர். தங்களுக்கு அந்த ஸ்தோத்ரங்கள் தெரியவில்லையே யென்று ஏங்குகின்றனர். தெரிந்து கொள்ள விரைகின்றனர். ஸ்தோத்ரம் தெரிந்தவர்கள் பொருள் விளக்கத்தை வேண்டுகின்றனர். இத்தகைய பக்தர்களுக்கும் இதரர்களுக்கும் இப்புத்தகம் உதவும் என்று நம்புகிறோம். இந்த ஸ்தோத்ரங்களை ஒவ்வொரு நாளும் அநுஸந்தித்துத் திருவேங்கடமுடையான் திருவருளுக்குப் பாத்திரமாவோம்.

R. ஸ்ரீநிவாஸராகவாசாரியர், M.A.

உரையாளர் :

---

# நூற்பொருள் விளக்கம்.

## ஸுப்ரபாதம்.

திருவேங்கடவனைத் துயிலெழுப்புதல் நூற்பொருள். இருபத்தொன்பது சுலோகங்கள் இந்நூலில் உள்ளன.

சுலோகம் 1-ல் இராமனாகவும் 2-ல் கோவிந்தனாகவும் விளித்துத் திருவேங்கடமுடையான் துயிலெழுப்பப்படுகிறான். அதற்கடுத்த 3, 4-ல் ஸ்ரீ மகாலக்ஷ்மி துயிலெழுப்பப்படுகிறாள். 5-வது சுலோகத்திலிருந்து திருவேங்கடமுடையான் துயிலெழுப்பப்படுகிறான். அத்ரி முதலிய மஹரிஷிகள், பரமசிவன் முதலிய தேவர்கள் வந்து ஸேவைக்குக் காத்திருப்பதாக 5, 6-வது சுலோகங்கள் கூறுகின்றன. 7-ல் காற்று, 8-ல் கிளிகள், 9-ல் நாரதர், 10-ல் வண்டினங்கள், 11-ல் தயிர்க்குடம், 12-ல் வண்டினங்களின் இனிய ஓசை, 14-ல் அடியார்நிலை முறையே வர்ணிக்கப்படுகின்றன, 15 - ல் 7 மலைகள், 16 - ல் திக்பாலகர்கள், 17-ல் ஆதிசேஷன் முதலியோர், 18-ல் நவக்ரஹங்கள் 24-ல் தசாவதாரங்கள், 25-ல் திருமஞ்சன தீர்த்தம் கொண்டுவரும் அடியார்கள், 26-ல் மங்களாசாஸனம் செய்யும் ஸ்ரீ வைஷ்ணவர்கள், 27-ல் மங்களப் பொருள்களோடு வந்திருக்கும் ஸநகஸநந்தநாதி முனிவர்கள் கூறப் பெறுகின்றனர்.

## ஸ்தோத்ரம்.

திருவேங்கடவனைப் புகழ்தல் நூற்பொருள். பதினொரு சுலோகங்கள் இந்நூலில் உள்ளன.

முதல் சுலோகத்தில் திருவேங்கடமுடையானுக்குத் திருமகள்பால் உள்ள கவிந்த காதலும், 2-ல் அயன் முதலிய தேவரும் எம்பெருமானைச் சரணமடைகின்றனர் என்

பதுவும், 3-ல் நாம் செய்த தவறுகளை எம்பெருமான் பொறுத்து மன்னித்துவிடும் வகையும், 4, 5-ல் திருவேங்கடமுடையானைக் காட்டிலும் நாம் அடையத்தக்க வேறு பெரிய தெய்வம் இல்லையென்பதுவும், 5-ல் ஸ்ரீ கிருஷ்ணனே திருவேங்கடமுடையான் என்பதுவும் 6, 7, 8 இம்மூன்று சுலோகங்களில் ஸ்ரீராமனே திருவேங்கடமுடையான் என்பதுவும், 8-ல் ஸ்ரீநிவாஸனைத் தவிர வேறு தலைவன் நமக்கில்லை என்பதுவும், 10-ல் ஒருதரம் வணங்கினாலே நாம் கோரிய பயனைப் பெறலாமென்பதுவும், 11-ல் நாம் செய்யும் தவறுகளை மன்னித்துவிடுகிறான் என்பதுவும் கூறப்பெறுகின்றன.

ப்ரபத்தி.

சரணமடைதல் நூற்பொருள். பதினாறு சுலோகங்கள் இந்நூலில் உள்ளன.

1-ல் திருமகள் வணக்கம் 2 முதல் 15 வரையில் சரணாகதி. 16-ல் நாம் திருவேங்கடமுடையானுக்குத் தொண்டு செய்தலெனும் சரணாகதியின் பயன் என்ற இவ்விஷயங்கள் முறையே கூறப்படுகின்றன.

மங்களாசாஸனம்.

எம்பெருமானுக்கு மங்களங்களை வேண்டுதல் நூற்பொருள். பதினான்கு சுலோகங்கள் இந்நூலில் உள்ளன.

1 முதல் 14 வரையிலுள்ள எல்லா சுலோகங்களிலும் 'எம்பெருமானுக்கு மங்களம் உண்டாகட்டு'மென்று வேண்டப்படுகிறது.



श्री:

।। श्रीवेङ्कटेशाय नमः ।।

# ॥ श्रीवेङ्कटेशसुप्रभातम् ॥



*कौसल्या सुप्रजा राम पूर्वा सन्ध्या प्रवर्तते ।
उत्तिष्ठ नरशार्दूल कर्तव्यं दैवमाह्निकम् ।।

கௌஸல்யா ஸுப்ரஜா ராம பூர்வா ஸந்த்யா ப்ரவர்த்ததே |
உத்திஷ்ட நரசார்தூல கர்த்தவ்யம் தைவமாஹ்நிகம் || 1

उत्तिष्ठोत्तिष्ठ गोविन्द उत्तिष्ठ गरुडध्वज ।
उत्तिष्ठ कमलाकान्त त्रैलोक्यं मङ्गलं कुरु ।।

உத்திஷ்டோத்திஷ்ட கோவிந்த உத்திஷ்ட கருடத்வஜ |
உத்திஷ்ட கமலாகாந்த த்ரைலோக்யம் மங்களம் குரு || 2

मातस्समस्तजगतां मधुकैटभारेः वक्षोविहारिणि मनोहरदिव्यमूर्ते ।
श्रीस्वामिनि श्रितजनप्रियदानशीले श्रीवेङ्कटेशदयिते तव सुप्रभातम् ।।

மாதஸ்ஸமஸ்தஜகதாம் மதுகைடபாரேः
வக்ஷோவிஹாரிணி மநோஹர திவ்ய மூர்த்தேः |
ஶ்ரீஸ்வாமிநி ச்ரிதஜந ப்ரியதாந சீலே
ஶ்ரீ வேங்கடேச'தயிதே தவ ஸுப்ரபாதம் || 3

---

* இச்சுலோகம் வால்மீகியில் உள்ளது. விச்வாமித்ரர் இராமனை எழுப்பும் சுலோகம்.

ஸ்ரீ:

# ஸ்ரீ வேங்கடேச ஸுப்ரபாதம்

(1) கோசலை மனங்குளிர அவள் மணிவயிறு வாய்த்தவனே! காலை வேளையாய்விட்டது. நாம் தினந்தோறும் செய்ய வேண்டிய ஸந்த்யாவந்தனம் முதலிய கருமங்களைச் செய்ய வேண்டும். ஆதலின் நீ (உன் தம்பியுடன்) உறங்காதெழுந்தருள்வாயாக.

குறிப்பு :—திருவேங்கடவனும் இராமனும் ஒருவனே.

(2) நீ கண் விழிக்காவிடில் மூவுலகங்களும் செம்மை பெருதழியும். ஆதலின் அவைகளை வாழ்விப்பதற்காக நீ திருக்கண் மலர வேண்டும்.

(3) அழகின் மிகுதியால் திருவேங்கடமுடையான் திருவுள்ளத்தைக் கவர்ந்து அவனுடைய திருமார்பில் எப்பொழுதும் இருந்து விளையாடக் கூடிய செல்வாக்கு உனக்கு அவனிடத்தில் உண்டு. அத்தகைய அன்பு அவனுக்கு உன்னிடத்தில் உண்டு. எல்லா உலகங்களுக்கும் தாயாகிய நீ இவ்வுலகத்தவர்கள் உன்னை அண்டி வேண்டும் பயன்கள் அனைத்தையும் கொடுக்கும் இயல்புள்ளவளாயிருக்கிறாய். நீ திருக்கண் மலர வேண்டும்.

तव सुप्रभातमरविन्दलोचने भवतु प्रसन्नमुखचन्द्रमण्डले ।
विधिशङ्करेन्द्रवनिताभिरर्चिते वृषशैलनाथदयिते दयानिधे ॥

தவ ஸுப்ரபாத மரவிந்தலோசநே
பவது ப்ரஸந்ந முகசந்த்ர மண்டலே ।
விதிசங்கரேந்த்ர வநிதாபிரர்ச்சிதே
வ்ருஷசைலநாததயிதே தயாநிதே ॥ 4

अत्र्यादिसप्तऋषयस्समुपास्य सन्ध्याम् आकाशसिन्धुकमलानि मनोहराणि।
आदाय पादयुगमर्चयितुं प्रपन्नाः शेषाद्रिशेखरविभो तव सुप्रभातम् ॥

அத்ர்யாதி ஸப்தரிஷயஸ்ஸமுபாஸ்ய ஸந்த்யாம்
ஆகாசஸிந்துகமலாநி மநோஹராணி ।
ஆதாய பாதயுகமர்ச்சயிதும் ப்ரபந்நாः
சேஷாத்ரி சேகர விபோ தவ ஸுப்ரபாதம் ॥ 5

पञ्चाननाब्जभवषण्मुखवासवाद्याः त्रैविक्रमादिचरितं विबुधाः स्तुवन्ति ।
भाषापतिः पठति वासरशुद्धिमारात् शेषाद्रिशेखरविभो तव सुप्रभातम् ॥

பஞ்சாநநாப்ஜபவ ஷண்முக வாஸவாத்யாः
த்ரைவிக்ரமாதிசரிதம் விபுதாः ஸ்துவந்தி ।
பாஷாபதிः படதி வாஸர சுத்திமாராத்
சேஷாத்ரி சேகர விபோ தவ ஸுப்ரபாதம் ॥ 6

ईषत्प्रफुल्लसरसीरुहनारिकेलपूगद्रुमादिसुमनोहरपालिकानाम् ।
आवाति मन्दमनिलस्सह दिव्यगन्धैः शेषाद्रिशेखरविभो तव सुप्रभातम् ॥

ஈஷத் ப்ரபுல்ல ஸரஸீருஹ நாரிகேல-
பூகத்ருமாதி ஸுமநோஹர பாலிகாநாம் ।
ஆவாதி மந்த மநிலஸ் ஸஹ திவ்யகந்தைः
சேஷாத்ரி சேகர விபோ தவ ஸுப்ரபாதம் ॥ 7

(4) குளிர்ந்த கண்கள், தெளிந்த முகம், பற்றின வர்களிடத்தில் அருள் முதலிய உயர்ந்த குணங்களை உடைய உன்னிடத்தில் திருவேங்கடமுடையான் அன்புடன் இருக்கிறுன். இத்தகைய மேன்மை வாய்ந்த உன் அருளைப் பெற்று வாழ்வதற்காக ஸரஸ்வதியும், பார்வதியும், இந்திராணியும் உன்னை வணங்கித் தொழுகின்றனர்.

குறிப்பு:-திருவேங்கடமென்பது ஏழுமலைகள் கொண்ட ஒரு மலைத்தொடர். அதனுல் அப்பிரானுக்கு ஏழுமலையான் என்றும் பெயர் உண்டு. அவைகளில் 'வ்ருஷசைலம்" என்பது ஒன்று. மலைகளின் பெயர்களைப் பதினைந்தாவது சுலோகத்தில் காண்க.

(5) வெகு தூரத்திலுள்ள ஸப்த ரிஷிகளும் காலைக் கடன்களை முடித்துக் கொண்டு ஸுப்ரபாத ஸேவைக் காகவும் அபிமுகமான ஆராதன ஸேவைக்காகவும் வந்து விட்டனர். நீ துயிலெழுந்து ஸேவை சாதித்தருளுக;

குறிப்பு:—ஸப்த ரிஷி - 'ரி' யை ரி. ரு: இரண்டிற்கு மிடையாய் உச்சரிக்க.

(6) அரன் அயன் முதலிய தேவதைகள் உன்னுல் தாங்கள்பெற்ற நன்மைகளைக் கூறி உன்னைப் புகழ்கின்றனர். காலையில் உன் முன்னிலையில் படிக்கவேண்டிய பஞ்சாங்கத்தைத் தேவகுரு படித்துக் கொண்டிருக்கிறுர்; துயிலெழுந்து நீ திருச்செவி சாத்த வேண்டும்.

குறிப்பு :-பஞ்ச ஆநநன்-ஐந்து முகமுள்ளவன் (அரன்). அப்ஜ பவன்—(பெருமாள் திருநாபிக்) கமலத்தில் தோன்றியவன் (அயன்). ஷண்முகன் - ஆறுமுகங்களையுடையவன் (கந்தன்).

(7) பொழுது புலருகின்றது. உனக்கென்றே இம் முளரி மலர்கள் முதலியவை சிறுகச் சிறுக மலர்கின்றன; குளிர்ந்த காற்று வீசுகின்றது. நீ துயிலெழுந்து இவைகளைக் கடைக்கணித்து அருளல் வேண்டும்.

उन्मील्य नेत्रयुगमुत्तमपञ्जरस्थाः पात्रावशिष्टकदलीफलपायसानि ।
भुक्त्वा सलीलमथ केलिशुकाः पठन्ति शेषाद्रिशेखरविभो तव सुप्रभातम् ।।

உந்மீல்ய நேத்ரயுக முத்தம பஞ்சர ஸ்தாஃ
பாத்ராவஶிஷ்ட கதலீபல பாயஸாநி |
புக்த்வா ஸலீலமத கேளிஶுகாஃ படந்தி
சேஷாத்ரி சேகர விபோ தவ ஸுப்ரபாதம் || 8

तन्त्रीप्रकर्षमधुरस्वनया विपञ्च्या गायत्यनन्तचरितं तव नारदोऽपि ।
भाषासमग्रमसकृत्करचाररम्यं शेषाद्रिशेखरविभो तव सुप्रभातम् ।।

தந்த்ரீ ப்ரகர்ஷ மதுர ஸ்வநயா விபஞ்ச்யா
காயத்யநந்த சரிதம் தவ நாரதோ²பி |
பாஷாஸமக்ரமஸக்ருத்கரசார ரம்யம்
சேஷாத்ரி சேகர விபோ தவ ஸுப்ரபாதம் || 9

भृङ्गावली च मकरन्दरसानुविद्धझङ्कारगीतनिनदैस्सह सेवनाय ।
निर्यात्युपान्तसरसीकमलोदरेभ्यः शेषाद्रिशेखरविभो तव सुप्रभातम् ।।

ப்ருங்காவலீ ச மகரந்த ரஸாநுவித்த-
ஜங்காரகீத நிநதைஸ் ஸஹ ஸேவநாய |
நிர்யாத்யுபாந்த ஸரஸீ கமலோதரேப்யஃ
சேஷாத்ரி சேகர விபோ தவ ஸுப்ரபாதம் || 10

योषागणेन वरदध्नि विमथ्यमाने घोषालयेषु दधिमन्थनतीव्रघोषाः ।
रोषात्कलिं विदधते ककुभश्च कुम्भाः शेषाद्रिशेखरविभो तव सुप्रभातम् ।।

யோஷாகணேந வரதத்நி விமத்யமாநே
கோஷாலயேஷு ததிமந்தந தீவ்ரகோஷாஃ |
ரோஷாத்கலிம் விதததே ககுபஸ்ச கும்பாஃ
சேஷாத்ரி சேகர விபோ தவ ஸுப்ரபாதம் || 11

(8) உன் திருநாமங்களைக் கூறி உன் பக்தர்களை மகிழ்விப்பதற்காகவே உன் திருக்கோயிலில் கூண்டுகளில் வைக்கப் பட்டிருக்கும் ஆடற் கிளிகள், நீ முன்னிரவு அமுது செய்து கலங்களில் மிகுந்திருக்கும் திருக்கன்ன லமுது முதலிய உன் ப்ரஸாதங்களை உண்டு ஆனந்தத்துடன் உன் திருநாமங்களைக் கூறுகின்றன. நீயும் துயிலெழுந்து உன் திருநாமங்களின் இனிமையைத் துய்த்தல் வேண்டும்.

(9) ஓரிடத்தும் நிலை பெற்று நின்றறியாத நாரத முனிவரும் உன் பெருமையில் ஈடுபட்டு உன் திருக்கோயில் வாயிலில் நிலைபெற்று நின்று வீணையை மீட்டிக்கொண்டு உன் திவ்ய சரிதங்களைப் பாடுகிறார். எழுந்து திருச்செவி சாத்தியருளுக.

(10) பொழுது நன்கு புலர்ந்தமையின் தாமரை மலர்கள் நன்கு மலர்ந்துவிட்டன. இரவெல்லாம் குவிந் திருந்த அம்மலர்களுள் சிறைகிடந்து உன் ஸேவையை இழந்து வருந்திய வண்டினங்கள் இப்பொழுது வெளிவந்து களிப்புடன் பாடிக் கொண்டு உன்னைக் கண்டு வணங்க வந்திருக்கின்றன. எங்கும் நிறைந்தவனே! துயிலெழுந்து அவைகளின் அவாவையும் நிறைவேற்றுக.

(11) இடைச்சேரிகளில் உள்ள இளமங்கையர் கூட எழுந்திருந்து (காலைக் கடன்களை முடித்துக் கொண்டு) தயிர் கடைந்துக் கொண்டிருக்கின்றனர். அவ்வொலியும், அதனால் திக்குகளில் உண்டாகும் எதிரொலியும் நின் திருச்செவிகளில் விழவில்லையா? அருளுடன் துயிலெழ வேண்டும்.

குறிப்பு :-'ஸந்தி' என்ற சொல் தொக்கி நிற்கின்றது. இச் சுலோகத்திற்கு வேறு வகையிலும் சிலர் பொருள் கூறுவர்.

पद्मेशमित्रशतपत्रगतालिवर्गाः हर्तुं श्रियं कुवलयस्य निजाङ्गलक्ष्म्या ।
भेरीनिनादमिव बिभ्रति तीव्रनादम् शेषाद्रिशेखरविभो तव सुप्रभातम् ॥

பத்மேச மித்ர சதபத்ர கதாலிவர்காः
ஹர்த்தும் ச்ரியம் குவலயஸ்ய நிஜாங்கலக்ஷ்ம்யா ।
பேரீ நிநாத மிவ பிப்ரதி தீவ்ர நாதம்
சேஷாத்ரி சேகர விபோ தவ ஸுப்ரபாதம் || 12

श्रीमन्नभीष्टवरदाखिललोकबन्धो श्रीश्रीनिवास जगदेकदयैकसिन्धो ।
श्रीदेवतागृहभुजान्तरदिव्यमूर्ते श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ॥

ஸ்ரீமந் நபீஷ்டவரதாகில லோக பந்தோ
ஸ்ரீஸ்ரீநிவாஸ ஜகதேக தயைக ஸிந்தோ ।
ஸ்ரீதேவதா க்ருஹ புஜாந்தர திவ்ய மூர்த்தே
ஸ்ரீவேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் || 13

श्रीस्वामिपुष्करिणिकाऽऽप्लवनिर्मलाङ्गाः श्रेयोऽर्थिनो हरविरिञ्चसनन्दनाद्याः ।
द्वारे वसन्ति वरवेत्रहतोत्तमाङ्गाः श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ॥

ஸ்ரீ ஸ்வாமி புஷ்கரிணிகாப்லவ நிர்மலாங்காः
ச்ரேயோர்த்திநோ ஹரவிரிஞ்ச ஸநந்தநாத்யாः ।
த்வாரே வஸந்தி வரவேத்ர ஹதோத்தமாங்காः
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் || 14

श्रीशेषशैलगरुडाचलवेङ्कटाद्रिनारायणाद्रिवृषभाद्रिवृषाद्रिमुख्याम् ।
आख्यां त्वदीयवसतेरनिशं वदन्ति श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ॥

ஸ்ரீ சேஷசைல கருடாசல வேங்கடாத்ரி-
நாராயணாத்ரி வ்ருஷபாத்ரி வ்ருஷாத்ரி முக்யாம் ।
ஆக்யாம் த்வதீய வஸதேரநிசம் வதந்தி
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் || 15

(12) எம்பெருமானே! உன் திருநிறத்திற்கு வண்டினங்கள் உவமையாவது போல் குவளை மலர்களும் உவமையாகின்றன. இதனைப் பொறுது இவ்வண்டினங்கள் மலர்களின் கறு நிறத்தினும் தம் நிறம் மேன்மையானது என்பதை உலகிற்குப் பறையறைந்து அறிவிப்பன போல் ரீங்காரம் செய்கின்றன. உன்னைச் சேர்ந்தவர்களுள் எழும் இவ்விரோத உணர்ச்சியை விலக்குவதற்காகவாவும் நீ விரைந்து துயிலெழுக.

(13) அனைவர்க்கும் அனைத்துறவுமாகி நின்று அவர்கள் கோரும் பயன்களை அளித்து நல்வழிப்படுத்தும் கருணைக் கடலே! அருளே உருவெடுத்தவள் போன்ற அலர் மேல்மங்கை இமைப் பொழுதும் பிரியாது உறைகின்ற திருமார்பை உடையவனே! பரமபதத்தினின்றும் இப் பரம பதத்திற்கு நீ எழுந்தருளிய காரியத்தை நோக்கி விரைவில் துயிலெழுவாயாக.

(14) பெரும்பதவிகளிலிருக்கும் அயன் அரன் முதலியோரும் உன் முழு அருளை அடையவிரும்பி ஸ்வாமி புஷ்கரிணியில் நீராடி உள்ளும் புறமும் தூய்மை பெற்று உன்ஸேவைக்காக உன் திருக்கோயில் முன்னிலையில் நெருங்கி நிற்கின்றனர். அவர்களுக்கு இரங்கி நீ விரைந்து துயிலெழுவாயாக.

குறிப்பு :-ஸ்வாமிபுஷ்கரிணி: கோயிலுக்கு இடது புறத்தில் (வடக்கில்) உள்ள திருக்குளத்தில். நீராடித் தூய்மை பெற்ற பிறகே எத்தகையோரும் கோயிலுக்குள் செல்ல வேண்டும்.

(15) பரமபதத்தினின்றும் நீ விரும்பி எழுந்தருளியிருக்கும் இத் திருமலையின் பெருமையை அதற்குள்ள ஏழு பெயர்களாலும் சொல்லிக்கொண்டு, அரன் முதலியவர்கள் உன் திருக்கோயிலின் வாயிலில் நிற்கின்றனர். துயிலெழுந்து அருள் புரிவாயாக.

குறிப்பு :-சுலோகத்தில் கூறியுள்ள ஆறு பெயர்களுடன் ஸிம்ஹாசலம் என்பதையும் சேர்த்து ஏழு மலைகளின் பெயர்களை அறிந்து கொள்க. ஒவ்வொரு சிகரத்திற்கு ஒவ்வொரு பெயர் ஏற்பட்டிருக்கிறது.

सेवापराश्शिवसुरेशकृशानुधर्म रक्षोऽम्बुनाथपवमानधनाधिनाथाः ।
बद्धाञ्जलिप्रविलसन्निजशीर्षदेशाः श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ।।

ஸேவாபரா: சிவ ஸுரேச க்ருசாநு தர்ம-
ரக்ஷோऽம்புநாத பவமாந தநாதிநாதா: ।
பத்தாஞ்சலி ப்ரவிலஸந் நிஜ சீர்ஷ தேசா:
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் ‖ 16

घाटीषु ते विहगराजमृगाधिराज नागाधिराजगजराजहयाधिराजाः ।
स्वस्वाधिकारमहिमाधिकमर्थयन्ते श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ।।

தாடீஷு தே விஹகராஜ ம்ருகாதிராஜ-
நாகாதிராஜ கஜராஜ ஹயாதிராஜா: ।
ஸ்வஸ்வவாதிகார மஹிமாதிக மர்த்தயந்தே
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் ‖ 17

सूर्येन्दुभौमबुधवाक्पतिकाव्यसौरि स्वर्भानुकेतुदिविषत्परिषत्प्रधानाः ।
त्वद्दासदासचरमावधिदासदासाः श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ।।

ஸூர்யேந்து பௌம புத வாக்பதி காவ்ய ஸௌரி
ஸ்வர்பாநு கேது திவிஷத்பரிஷத்ப்ரதாநா: ।
த்வத் தாஸ தாஸ சரமாவதி தாஸ தாஸா:
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் ‖ 18

*(16)* திக்பாலகர்கள் எண்மரும் தொண்டு செய்வதற்காகக் கைகளைக் கூப்பித் தொழுது கொண்டு காத்திருக்கின்றனர். நீ துயிலெழுந்து அவரவர் செய்யவேண்டிய பணிகளைக் கட்டளையிட்டருளுக.

*(17)* திருவேங்கடநாதனே! நீ வெளியில் எழுந்தருளும் பொழுது கருடகதி, ஸிம்மகதி, ஸர்ப்பகதி, கஜகதி, அச்வகதி என்று சிறப்பித்துக் கூறப்படும் உன் அழகிய நடைகளின் மேன்மையைக்கண்டு கருடன் முதலானோர் ஐவரும், தற்பொழுது அவ்வகை நடை நடத்தலிலுள்ள தங்கள் தகுதியின் குறையை யுணர்ந்து அதிகமான தகுதியைப்பெற விரும்பி உன் திருக்கோயில் வாயிலில் காத்திருக்கின்றனர். நீ துயிலெழுந்து அவர்கள் விருப்பத்தை நிறைவேற்றியருள வேண்டும்.

குறிப்பு :- விஹக ராஜன் - பக்ஷிகள் தலைவன். ம்ருகஅதிராஜன் - விலங்குகளுக்கு அரசன். இவ்வாறே மற்றவை. தாக்ஷு என்ற பதத்திற்கு யுத்தயாத்திரை என்ற (முதலில் தோன்றக் கூடிய) அர்த்தத்தைக் கூறிக் கருடன் முதலியவர்கள் நீ செய்யும் யுத்தயாத்திரையில் தங்களுக்கு அதிக பாகம் வேண்டுமென்று கோருகின்றனர் என்று பலர் இச் சுலோகத்திற்குப் பொருள் கூறுகின்றனர்.

*(18)* தேவர்களிடத்தும் தங்கள் வன்மையைக் காண்பிக்க வல்ல நவக்கிரஹங்கள் உன் அடியார் திறத்தில் அவ்வாறிராததோடு அவர்களுக்குத் தொண்டும் செய்து அவ்வாயிலாய் உன் திருவருளைப் பெற விரும்பி வந்து காத்துநிற்கின்றனர். நீ துயிலெழுந்து அவர்களுக்கு அருளுக.

குறிப்பு :- ஸூர்ய, ஸௌரி முதலிய பதங்களிலுள்ள ஸகாரத்தை உச்சரிக்கும் பொழுது ஸபை ஸரஸ்வதி ஸினிமா முதலிய பதங்களில் உள்ள ஸகாரத்தை உச்சரிக்கவும். அரிசி சிவன் என்னுமிடத்திலுள்ள 'சி' போல் உச்சரிக்கக் கூடாது.

त्वत्पादधूलिभरितस्फुरितोत्तमाङ्गाः स्वर्गापवर्गनिरपेक्षनिजान्तरङ्गाः ।
कल्पागमाकलनयाऽऽकुलतां लभन्ते श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ।।

த்வத் பாத தூளி பரித ஸ்புரிதோத்தமாங்கா·
ஸ்வர்காபவர்க நிரபேக்ஷ நிஜாந்தரங்காঃ |
கல்பாகமாகலநயாऽऽகுலதாம் லபந்தே
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் || 19

त्वद्गोपुराग्रशिखराणि निरीक्षमाणाः स्वर्गापवर्गपदवीं परमां श्रयन्तः ।
मर्त्या मनुष्यभुवने मतिमाश्रयन्ते श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ।।

த்வத்கோபுராக்ரசிகராணி நிரீக்ஷமாணாঃ
ஸ்வர்காபவர்க பதவீம் பரமாம் ச்ரயந்தঃ |
மர்த்யா மநுஷ்யபுவநே மதிமாச்ரயந்தே
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் || 20

श्रीभूमिनायक दयादिगुणामृताब्धे देवाधिदेव जगदेकशरण्यमूर्ते ।
श्रीमन्ननन्तगरुडादिभिरर्चिताङ्घ्रे श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ।।

ஸ்ரீ பூமிநாயக தயாதிகுணாம்ருதாப்தே
தேவாதிதேவ ஜகதேக சரண்யமூர்த்தே |
ஸ்ரீமந் நநந்த கருடாதிபிரர்ச்சிதாங்க்ரே
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் || 21

*(19)* சூரியன் முதலிய நவக்ரஹங்கள் அதிகார புருஷர்கள். இப்பொழுதே மோக்ஷம் அடையவேண்டு மென்றிருந்தாலும் பொறுப்பை விட்டுப்போக இயலாத வர்கள். அத்தகைய அவர்கள் இங்கு வந்து உன் அடி யார்களுக்குத் தொண்டு செய்து அவ்வாயிலாய் உன் அருளைப்பெற்று உன் திருவடித் தூள்களைத் தங்கள் தலையில் பெய்து கொண்டு அவ்வானந்தத்தில் சுவர்க்க மும் வேண்டாம் மோக்ஷமும் வேண்டாம் என்று கூறி நிற்கின்றனர். வேறுகல்பங்கள் வந்துவிட்டால் தாங்கள் இவ்வாறு இங்கிருந்து களிக்க இயலாதுபோகுமே யென்று வருந்தவும் வருந்துகின்றனர். நீ துயிலெழுந்து அவர்களுக்கு அருளுக.

*(20)* யஜ்ஞயாகாதிகள் செய்து சுவர்க்கம் செல்லும் மனிதர்களும், இவ்வுலகத்தை வெறுத்து, பக்தி, ப்ரபத்திகளில் ஒன்றைச் செய்து மோக்ஷம் செல்லும் மனிதர்களும், தாங்கள் செல்லும் வழியின் கோடியை அடைந்து பாக்ய விசேஷத்தால் உன் கோபுரங்களைத் தற்செயலாய்த் திரும்பிப் பார்க்க நேருமாயின் பாடு பட்டுச் சம்பாதித்த அவ்வுலகங்களை விட்டு உன் ஸேவைக் காக மனுஷ்ய உலகத்திற்கே திரும்பிவர முடிவு செய்கின் றனர். ஸ்ரீநிவாஸா! நீ துயிலெழுந்து அவ்வாறு திரும்பி வந்தவருக்கு அருளுக.

குறிப்பு :— மேலுலகத்தில் சென்று உத்தம பதங்களை அடைந்தவரும், உன்னை ஸேவிக்க விரும்பி மனுஷ்ய லோகத் திற்கு மறுபடியும் வந்து விடுகின்றனர் என்றும் பலர் பொருள் கூறுகின்றனர்.

*(21)* அனந்தன், கருடன் முதலிய நித்யஸூரிகள் உன் அருளை நோக்கிக் கோயில்வாயிலில் நின்று கொண் டிருக்கின்றனர். அருட்கடலாகிய நீ உன் மஹிஷிகளுடன் எழுந்து வந்து அருள்புரிய வேண்டும்.

श्रीपद्मनाभ पुरुषोत्तम वासुदेव वैकुण्ठ माधव जनार्दन चक्रपाणे ।
श्रीवत्सचिह्न शरणागतपारिजात श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ।।

ஸ்ரீ பத்மநாப புருஷோத்தம வாஸுதேவ
வைகுண்ட மாதவ ஜநார்தந சக்ரபாணே ।
ஸ்ரீ வத்ஸசிஹ்ந சரணாகதபாரிஜாத
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் ‖ 22

कन्दर्पदर्पहरसुन्दरदिव्यमूर्ते कान्ताकुचाम्बुरुहकुड्मललोलदृष्टे ।
कल्याणनिर्मलगुणाकरदिव्यकीर्ते श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ।।

கந்தர்ப்ப தர்ப்பஹரஸுந்தர திவ்ய மூர்த்தே
காந்தா குசாம்புருஹ குட்மல லோல த்ருஷ்டே ।
கல்யாண நிர்மல குணாகர திவ்யகீர்த்தே
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் ‖ 23

मीनाकृते कमठ कोल नृसिंह वर्णिन् स्वामिन् परश्वथतपोधन रामचन्द्र ।
शेषांशराम यदुनन्दन कल्किरूप श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ।।

மீநாக்ருதே கமட கோல ந்ருஸிஹ்ம வர்ணிந்
ஸ்வாமிந் பரச்வததபோதந ராமசந்த்ர ।
சேஷாம்சராம யதுநந்தந கல்கிரூப
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் ‖ 24

एलालवङ्गघनसारसुगन्धतीर्थं दिव्यं वियत्सरिति हेमघटेषु पूर्णम् ।
धृत्वाद्य वैदिकशिखामणयः प्रहृष्टाः तिष्ठन्ति वेङ्कटपते तव सुप्रभातम् ।।

ஏலா லவங்க கநஸார ஸுகந்த தீர்த்தம்
திவ்யம் வியத்ஸரிதி ஹேம கடேஷு பூர்ணம் ।
த்ருத்வாத்ய வைதிக சிகாமணயः ப்ரஹ்ருஷ்டாः
திஷ்டந்தி வேங்கடபதே தவ ஸுப்ரபாதம் ‖ 25

(22) சரண் அடைந்தவர்களைக் கைவிடாதவனாகிய உன்னை, உன்னுடைய பல்வகைத் திருநாமங்களைப் பிதற்றிக்கொண்டு உன் வாயிற் கடையில் நின்று உன் அருள் ஒன்றையே எதிர் நோக்கி நிற்கும் எங்களுக்கு அருளுவதற்காகத் துயிலெழுவாயாக.

குறிப்பு :— வாஸுதேவன் - எல்லா வஸ்துக்களிலும் வசிப்பவன். ஆயினும் குற்றமற்று விளங்குபவன். பாரிஜாதம் - தேவலோகத்திலுள்ள ஐந்து தருக்களில் ஒன்று. மாதவன் - திருமகள் நாதன். ஜந அர்தநன் - ஜனங்களின் பிறப்பை நீக்குபவன். சக்ரபாணி-திருவாழியைக் கையில் தரிப்பவன். வைகுண்டன் - அழிவற்றவன்.

(23) உன் திருமேனியின் அழகில் ஈடுபட்ட திருமகளும் உன்னைத் துயிலெழ வொட்டாள். அவள் திருமுலைத்தடங்களின் அனுபவத்தில் ஈடுபட்ட நீயும் துயிலெழாய். அவ்வாறின்றி அருள் முதலிய உன் குணங்களின் மேன்மையைப் பொய்யாக்காமல் துயிலெழுந்து அடியார்களுக்கு அருள்வாயாக.

(24) நீ உலகுக்கெல்லாம் ஒரு தலைவன் ஆனமையின் பரமபதத்தை விட்டிறங்கிப் பல அவதாரங்கள் எடுத்து உலகைத் தீங்கினின்றும் காப்பாற்றி நல்வழிப் படுத்தியதும், இனியும் கல்கி அவதாரம் எடுத்து நல்வழிப்படுத்தப் போவதும் முற்றிலும் தகுந்த செய்கை. உடைமையை உடையவன் காப்பாற்றுவது பொறுப்பு. அத்தகைய நீ உன் கோயில் தேடி வந்து காத்திருக்கும் அடியார்களைக் காப்பாற்ற வேண்டும். துயிலெழுக. [ஏற்பட வேண்டும்.

குறிப்பு :- கல்கி அவதாரம் இனிமேல் கலியுக முடிவில்

(25) வேதமுறை தவறாதொழுகும் ஸ்ரீ வைஷ்ணவ ப்ராஹ்மணர்கள் தங்கக்குடங்களில் ஆகாச கங்கையின் தீர்த்தத்தை நிரப்பி நல்ல மணமூட்டித் தலைகளில் எடுத்துக்கொண்டு உன் ஸந்நிதி வாயிலையடைந்து உவகையுடன் காத்து நிற்கின்றனர். துயிலெழுக.

குறிப்பு:- வைதிக சிகாமணய:— திருமலையில் இன்றும் முதல் தீர்த்தம் பெற்றுவரும் திருமலைநம்பிகள் வம்சத்தவர்களாகிய தோழப்பர்கள் இன்றும் ஆகாசகங்கா தீர்த்த கைங்கர்யம் நடத்தி வருகிறார்கள்.

भास्वानुदेति विकचानि सरोरुहाणि संपूरयन्ति निनदैः ककुभो विहङ्गाः ।
श्रीवैष्णवास्सततमर्थितमङ्गलास्ते धामाश्रयन्ति तव वेङ्कट सुप्रभातम् ।।

பாஸ்வாநுதேதி விகசாநி ஸரோருஹாணி
ஸம்பூரயந்தி நிநதைஃ ககுபோ விஹங்காஃ |
ஸ்ரீ வைஷ்ணவாஃ ஸததமர்த்தித மங்களாஸ்தே
தாமாச்ரயந்தி தவ வேங்கட ஸுப்ரபாதம் || 26

ब्रह्मादयस्सुरवरास्समहर्षयस्ते सन्तस्सनन्दनमुखास्तव योगिवर्याः ।
धामान्तिके तव हि मङ्गलवस्तुहस्ताः श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ।।

ப்ரஹ்மாதயஸ் ஸுரவராஸ்ஸமஹர்ஷயஸ்தே
ஸந்தஸ் ஸநந்தந முகாஸ்தவ யோகிவர்யாஃ |
தாமாந்திகே தவ ஹி மங்களவஸ்து ஹஸ்தாஃ
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் || 27

लक्ष्मीनिवास निरवद्यगुणैकसिन्धो संसारसागरसमुत्तरणैकसेतो ।
वेदान्तवेद्यनिजवैभव भक्तभोग्य श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ।।

லக்ஷ்மீநிவாஸ நிரவத்யகுணைகஸிந்தோ
ஸம்ஸார ஸாகர ஸமுத்ரணைகஸேதோ |
வேதாந்தவேத்ய நிஜவைபவ பக்தபோக்ய
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் || 28

इत्थं वृषाचलपतेरिह सुप्रभातं ये मानवाः प्रतिदिनं पठितुं प्रवृत्ताः ।
तेषां प्रभातसमये स्मृतिरङ्गभाजां प्रज्ञां परार्थसुलभां परमां प्रसूते ।।

இத்தம் வ்ருஷாசலபதேரிஹ ஸுப்ரபாதம்
யே மாநவாஃ ப்ரதிதிநம் படிதும் ப்ரவ்ருத்தாஃ|
தேஷாம் ப்ரபாதஸமயே ஸ்ம்ருதிரங்கபாஜாம்
ப்ரஜ்ஞாம் பரார்த்தஸுலபாம் பரமாம் ப்ரஸூதே || 29

।। इति श्रीवेङ्कटेशस्तोत्रम् ।।

---

(26) பொழுது புலர்ந்துவிட்டது. நீ துயிலெழப் போகிருய் என்று களிப்பன போல் பகுத்தறிவற்ற பறவைகளும் எழுந்து சிலம்புகின்றன. அறிவுணர்ச்சியற்ற தாமரைமலர்களும் மலர்கின்றன. அடியார்கள் மங்களாசாஸனம் செய்துகொண்டுவந்து நிற்கின்றனர். அடியவர்க்கெளியனை நீ இன்னும் உறங்குவது அழகன்று. துயிலெழுந்தருளுக.

(27) நீ துயிலெழுந்ததும் உன் திருக்கண்மலர் திறந்து முதலில் பார்க்கத்தக்க கண்ணுடி முதலிய மங்களப் பொருள்களைக் கைகளில் ஏந்திக்கொண்டு நான்முகன் முதலியோர் கோயில் அருகில் (மறைவாக) நிற்கின்றனர். துயிலெழுந்தருளுக.

(28) பக்தர்கள் உன்னைப் போக்யமாய் அனுபவிப்பது போல நீயும் அவர்களைப்போக்யமாய் அனுபவிப்பவனுதலின் துயிலெழுந்து வாயிலில் காத்திருக்கும் பக்தர்களுக்கு அருளுக.

குறிப்பு:- நிர் அவத்ய குணேகஸிந்தோ-கடவுளிடத்தில் ஒரு குற்றமும் இல்லை, குணங்கள் எல்லாம் உள்ளன. குற்றமின்மை (கல்யாண) குணங்கள் நிறைந்திருக்கை என்ற இவ்விரண்டும் உபயலிங்கம் (2 அடையாளங்கள்) என்று கூறப்படும்.

(29) தினந்தோறும் காலை வேளையில் இத திருப்பள்ளியெழுச்சியைப் படிப்பவர்களும் நினைப்பவர்களும் பரம்பொருளைப் பற்றிய நல்லறிவைப் பெறுகின்றனர்.

ஸ்ரீ வேங்கடேச ஸுப்ரபாதம் முற்றிற்று.

---

|| ॐ ||

# || श्रीवेङ्कटेशस्तोत्रम् ||

कमलाकुचचूचुककुङ्कुमतो नियतारुणितातुलनीलतनो ।
कमलायतलोचन लोकपते विजयीभव वेङ्कटशैलपते ।।

கமலா குச சூசுக குங்குமதோ
நியதாருணிதாதுல நீலதநோ ।
கமலாயதலோசந லோகபதே
விஜயீபவ வேங்கடசைலபதே || 1

सचतुर्मुखषण्मुखपञ्चमुख प्रमुखाखिलदैवतमौलिमणे ।
शरणागतवत्सल सारनिधे परिपालय मां वृषशैलपते ।।

ஸசதுர்முக ஷண்முக பஞ்சமுக-
ப்ரமுகாகில தைவத மௌலி மணே ।
சரணாகத வத்ஸல ஸாரநிதே
பரிபாலய மாம் வ்ருஷசைலபதே || 2

अतिवेलतया तव दुर्विषहैः अनुवेलकृतैरपराधशतैः ।
भरितं त्वरितं वृषशैलपते परया कृपया परिपाहि हरे ।।

அதிவேலதயா தவ துர்விஷஹை
அநுவேல க்ருதை ரபராத சதைः।
பரிதம் த்வரிதம் வ்ருஷ சைலபதே
பரயா க்ருபயா பரிபாஹி ஹரே || 3

अधिवेङ्कटशैलमुदारमतेः जनताभिमताधिकदानरतात् ।
परदेवतया गदितान्निगमैः कमलादयितान्न परं कलये ।।

அதிவேங்கடசைலமுதாரமதேர்
ஜநதாபிமதாதிகதாநரதாத் ।
பரதேவதயா கதிதாந் நிகமைः
கமலாதயிதாந் ந பரம் கலயே || 4

ஸ்ரீ:

# ஸ்ரீ வேங்கடேச ஸ்தோத்ரம்

(1) நீ பரமபதத்திலிருந்து திருவேங்கடத்திற்கு வந்து எழுந்தருளியிருப்பது உலகங்களைக் காப்பாற்றுவதற்காகவே. எல்லாவுலகங்களுக்கும் நீ தலைவன் ஆனமையின் அது உன்பொறுப்பு. நீ அவ்வாறு செய்வாய் என்பதைக் கருணை வழிந்தொழுகும் நினது திருக்கண்கள் காண்பிக்கின்றன. நாங்கள் கடமையில் தவறும் பொழுது உன் திருவுள்ளம் சிறிது சீறுமாயினும் அதை ஆற்ற அலர்மேல் மங்கை அருகில் உள்ளாள். நீ அவள் சொல்லை மீறமாட்டாய் என்பது அவளுடன் எப்பொழுதும் இணைபிரியாமலிருப்பதினாலேயே தெரிகின்றது.

(2) அயன் அரன் முதலிய எல்லாக் கடவுளரும் உன்னைத் தம் தம் தலைகளில் வைத்துக் கொண்டாடுகின்றனர். நீயும் பிற குறைகளைப் பாராது சரணமடைந்தனர் என்ற ஒரு குணம் மாத்திரத்தையே கண்டு அனைவரையும் அன்புடன் காத்தருளுகிறாய். ஏழைகள் ஏழ்மையின் கொடுமை தாளாத சமயத்தில் தாங்கள் சேமித்து வைத்துள்ள நிதியை எடுத்து உபயோகித்துக் கொள்ள எண்ணுவது போல் அனைவரும் பெருங் கஷ்டங்களில் உன்னையே அடைய வேண்டியிருக்கிறது. அத்தகைய நீ என்னைக் காப்பாற்றுக.

(3) பொறுமைக் கடலாகிய நீயே பொறுமையிழக்கும் வண்ணம் நான் ஒவ்வொருபோதும் அளவுகடந்த தவறுகள் இழைத்துள்ளேன். ஆயினும் நீ காப்பாற்றுவாய் என்ற நம்பிக்கையுடன் உன்னிடம் விரைந்து வந்துள்ளேன். உன் பெரிய திருவருள் என்னைக் காப்பாற்ற வேண்டும்.

(4) நீ வரையாதருளும் வள்ளல் ஆனமையின் அடியார் கோரும் பயன்களையும், அவர் கோராவிடினும் அவர்களுக்கு நன்மையான வேறு பயன்களையும் அதிகமாக அளிக்கின்றாய். ஐயம் திரிபுகளுக்கு இடமின்றி உபநிஷத்துக்கள் எல்லாம் நீயே பரம்பொருள் என்று அறுதியிடுகின்றன. எல்லாரினும் உயர்ந்த திருமகளும் உன்னையே தன் அன்பனாக வரித்தாள். ஆதலின் உன்னிலும் உயர்ந்தவன் ஒருவன் இல்லை என்ற உண்மையை அடியேன் உறுதியாய் நம்புகின்றேன்.

कलवेणुरवावशगोपवधू शतकोटिवृतात्स्मरकोटिसमात् ।
प्रतिवल्लविकाभिमतात्सुखदात् वसुदेवसुतान्न परं कलये ॥

கலவேணுரவாவசகோபவதூ-
சதகோடிவ்ருதாத் ஸ்மரகோடிஸமாத் ।
ப்ரதிவல்லவி காபிமதாத் ஸுகதாத்
வஸுதேவஸுதாந் ந பரம் கலயே ॥ 5

अभिरामगुणाकर दाशरथे जगदेकधनुर्धर धीरमते ।
रघुनायक राम रमेश विभो वरदो भव देव दयाजलधे ॥

அபிராமகுணாகர தாசரதே
ஜகதேகதநுர்தர தீரமதே ।
ரகுநாயக ராம ரமேச விபோ
வரதோ பவ தேவ தயாஜலதே । 6

अवनीतनयाकमनीयकरं रजनीकरचारुमुखाम्बुरुहम् ।
रजनीचरराजतमोमिहिरं महनीयमहं रघुराममये ॥

அவநீ தநயா கமநீயகரம்
ரஜநீ கர சாரு முகாம்புருஹம் ।
ரஜநீ சர ராஜ தமோ மிஹிரம்
மஹநீய மஹம் ரகுராம மயே ॥ 7

(5) கோடி மன்மதர்கள் சேர்ந்தாலும் உன் அழகின் சிறு திவலைக்கு இணையாகார். விருப்பு வெறுப்பற்ற ஆயர் மங்கையர் உன் குழலோசைக்கு மயங்கி உன்னைச் சூழ்ந்து ஒருவர்க் கொருவர் பகையாது உன்னை விரும்பி யடைந்தவர். மோக்ஷ சுகத்தைக்கொடுப்பவனும் நீயே. வஸுதேவர் முன்பிறவியில் நான்முகனுக்கு உப (உதவி) ப்ரஜாபதியாய் இருந்த பொழுது உன்னைத்தொழுது உன் அருள் பெற்று உன்னை மகனாய் அடைந்தார். இந்நான்கு காரணங்களும் நீயே பரம்பொருள் என்பதற்குப் போதுமான சான்றுகள்.

குறிப்பு :- (1) அழகுடையவனே தலைவனாயிருக்க முடியும். (2) அடியார்கள் ஒருவர்க்கொருவர் பகையற்றிருப்பது பரம்பொருள் ஸந்நிதானத்தில்தான். (3) ஆதி காரணம்தான் த்யானம் செய்யப்பெறும். அதுதான் மோக்ஷஸுகத்தைக் கொடுக்க முடியும். (4) வஸுதேவர் முதற் பிறவியில் ஸுதபா என்ற ப்ரஜாபதியாய்இருந்தார். ஆதலின் அவர் உண்மையை அறிய முடியும்.

(6) ரகுவம்சத்தில் தசரத சக்ரவர்த்திக்குத் திருமகனாய் அவதரித்துத் தன் அழகாலும் குணங்களாலும் உலகங்களைக் களிக்கச் செய்து ஒப்பற்ற வில்லாளியாகவும் மாறா மனதுடையவனாகவும் விளங்கிய ஸ்ரீ ராமபிரானும் நீயே! 'ததாம்யேதத் வ்ரதம் மம' என்று கூறியதை நிறைவேற்று வாயாக.

(7) உன்னைப் பிரியமாட்டாது உன்னுடன் காடடைந்த பிராட்டியைப் பறிகொடுப்பதற்கும் பின் வாங்காது, தலைநிமிர்த்த ராவணனைக் கொன்று சரணம் புக்க தேவர்களின் விருப்பத்தை நிறைவேற்றினாய். சரணாகத ரக்ஷகனாகிய உன்னை உலகோர் கொண்டாடுகின்றனர். ஆதலின் அடியேனும் உன்னை சரணமாக அடைகிறேன்.

குறிப்பு :- ரஜநீசரர்-இரவில் திரிபவர்கள், இராக்கதர்கள். ரஜநீசரசாரு முகாம்புருஹம் (கஷ்டம் வந்தபோதும்) இயற்கை அழகும் உயர்வும் மாறாது இருந்தவன்.

सुमुखं सुहृदं सुलभं सुखदं स्वनुजं च सुकायममोघशरम् ।
अपहाय रघूद्वहमन्यमहं न कथञ्चन कञ्चन जातु भजे ।।

ஸுமுகம் ஸுஹ்ருதம் ஸுலபம் ஸுகதம்
ஸ்வநுஜஞ்ச ஸுகாய மமோகசரம் |
அபஹாய ரகூத்தஹ மந்ய மஹம்
ந கதஞ்சந கஞ்சந ஜாது பஜே || 8

विना वेङ्कटेशं न नाथो न नाथः सदा वेङ्कटेशं स्मरामि स्मारामि ।
हरे वेङ्कटेश प्रसीद प्रसीद प्रियं वेङ्कटेश प्रयच्छ प्रयच्छ ।।

விநா வேங்கடேசம் ந நாதோ ந நாதஃ
ஸதா வேங்கடேசம் ஸ்மராமி ஸ்மராமி |
ஹரே வேங்கடேச ப்ரஸீத ப்ரஸீத
ப்ரியம் வேங்கடேச ப்ரயச்ச ப்ரயச்ச || 9

अहं दूरतस्ते पदाम्भोजयुग्म प्रणामेच्छयाऽऽगत्य सेवां करोमि ।
सकृत्सेवया नित्यसेवाफलं त्वं प्रयच्छ प्रयच्छ प्रभो वेङ्कटेश ।।

அஹம் தூரதஸ்தே பதாம்போஜயுக்ம-
ப்ரணாமேச்சயாகத்ய ஸேவாம் கரோமி |
ஸக்ருத்ஸேவயா நித்ய ஸேவாபலம் த்வம்
ப்ரயச்ச ப்ரயச்ச ப்ரபோ வேங்கடேச || 10

अज्ञानिना मया दोषानशेषान्विहितान् हरे ।
क्षमस्व त्वं क्षमस्व त्वं शेषशैलशिखामणे ।।

அஜ்ஞாநிநா மயா தோஷா
நசேஷாந் விஹிதாந் ஹரே |
க்ஷமஸ்வ த்வம் க்ஷமஸ்வ த்வம்
சேஷசைல சிகாமணே || 11

।। इति श्रीवेङ्कटेशस्तोत्रम् ।।

---

(8) உதார மனத்தினனுகவும், அடியார்க் கெளிய வனுகவும், ஆண்மையும் வீரமும் பொருந்தியவனும், தானெருவன் போதாதென்று தம்பிகளுடன் அவதரித்து அடியார் வேண்டிய எல்லா இன்பங்களையும் அளித்தவனு மான ஸ்ரீராமன் நீயே. ஆதலின் உன்னையன்றி ஒருவரை யும் அணுகேன்.

(9) உன்னைத் தவிர்த்து வேறு இறைவன் உளன் என்று நான் கனவிலும் கருதவில்லையாதலின் எப்பொழு தும் உன்னையே த்யானித்துக் கொண்டிருக்கிறேன். அருள் செய்து நான் விரும்பியதை அல்லது எனக்கு நல்லது என்று உனக்குத் தோன்றியதைக் கொடுத்தருளுக.

(10) நான் வெகு தூரத்தினின்றும் வந்து உன்னை ஒருமுறை வணங்கித் தொண்டு புரிந்தேன். (பிறவிக் கடலில் தத்தளிக்கும் நான் பாபங்களாகிற அலைகளால் இழுக்கப்பட்டு உன்னை) (கரையை) விட்டுவிலகி வெகு தூரம் சென்று விட்டேன். புண்ணியங்களாகிற அலைகள் என்னை உன்னிடம் கொண்டு சேர்த்திருக்கின்றன. ஒரு முறை வணங்கினேன். நித்தியம் தொண்டுசெய்து களித் திருத்தல் என்னும் முக்தி ஸாம்ராஜ்யத்தை எனக்குக் கொடுத்தருளுக.

(11) அறியாது நான் செய்த குற்றங்களைப் பொறுத் தருள வேண்டும். இன்றேல் ஹரி என்ற உன் பெயரும் அர்த்த மில்லாது போம். பரமபதத்தை விட்டு நீ திரு மலைக்கு எழுந்தருளியதும் வீணும். ஆதலின் பொறுத் தருள வேண்டும்.

ஸ்ரீ வேங்கடேச ஸ்தோத்ரம் முற்றிற்று.

——(*)——

|| श्रीः ||

# || श्रीवेङ्कटेशप्रपत्तिः ||

ईशानां जगतोऽस्य वेङ्कटपतेर्विष्णोः परां प्रेयसीं
तद्वक्षःस्थलनित्यवासरसिकां तत्क्षान्तिसंवर्धिनीम् ।
पद्मालङ्कृतपाणिपल्लवयुगां पद्मासनस्थां श्रियं
वात्सल्यादिगुणोज्ज्वलां भगवतीं वन्दे जगन्मातरम् ॥

ஈசாநாம் ஜகதோऽஸ்ய வேங்கடபதேர்
விஷ்ணோः பராம் ப்ரேயஸீம்
தத்வக்ஷஸ் ஸ்தல நித்ய வாஸ ரஸிகாம்
தத்க்ஷாந்தி ஸம்வர்த்திநீம் ।
பத்மாலங்க்ருத பாணிபல்லவ யுகாம்
பத்மாஸநஸ்தாம் ச்ரியம்
வாத்ஸல்யாதிகுணோஜ்ஜ்வலாம் பகவதீம்
வந்தே ஜகந்மாதரம் ‖ 1

श्रीमन् कृपाजलनिधे कृतसर्वलोक सर्वज्ञ शक्त नतवत्सल सर्वशेषिन् ।
स्वामिन् सुशील सुलभाश्रितपारिजात श्रीवेङ्कटेश चरणौ शरणं प्रपद्ये ॥

ஸ்ரீமந் க்ருபாஜலநிதே க்ருதஸர்வலோக
ஸர்வஜ்ஞ சக்த நதவத்ஸல ஸர்வசேஷிந் ।
ஸ்வாமிந் ஸுசீல ஸுலபாச்ரித பாரிஜாத
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே ‖ 2

आनूपुरार्पितसुजातसुगन्धिपुष्पसौरभ्यसौरभकरौ समसन्निवेशौ ।
सौम्यौ सदाऽनुभवनेऽपि नवानुभाव्यौ श्रीवेङ्कटेश चरणौ शरणं प्रपद्ये ॥

ஆநூபுரார்ப்பித ஸுஜாத ஸுகந்தி புஷ்ப-
ஸௌரப்ய ஸௌரபகரௌ ஸமஸந்நிவேசௌ ।
ஸௌம்யௌ ஸதாநுபவநேऽபி நவாநுபாவ்யௌ
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே ‖ 3

ஸ்ரீ:

# ஸ்ரீ வேங்கடேச ப்ரபத்தி

(1) எப்பொழுதும் கைகளில் தாமரைமலர்களை ஏந்திக் கொண்டிருப்பதாலும் தாமரை மலரில் இருப்பதாலும் நித்யானந்த மயமாயிருக்கும் திருமகள் நம் தாய்; நம் தலைவி. அவள் திருவேங்கடவனுடைய திருமார்பில் நித்யவாஸம் செய்து கொண்டு அவனுடைய சீற்றத்தைத் தணித்துப் பொறுமையை வளர்க்கிறாள். நம்மிடத்தும் அளவுகடந்த அன்பு வைத்திருக்கிறாள். ஆதலின் தவறிழைத்து விட்டோமே யென்ற அச்சமின்றி நம் தந்தையை திருவேங்கடவனை நாம் அடையலாம். அவ்வாறு அடைவதற்குக் காரணமாய்த் திருமகளை நான் வணங்குகிறேன். தாயை வணங்கித் தந்தையிடம் செல்வதால் எனக்கொரு பயமுமில்லை.

(2) திருவேங்கடவா ! நீ கருணைக்கடல். எளியவர் பால் அன்பு நிறைந்தவன். எல்லாமறிந்தவன். எங்கள் தலைவன். எங்களை உனக்கு அடியார்களாக நீயே செய்து கொள்ள வேண்டியவன். திருமகளன்பன் என்று நினைத்து உன் திருவடிகளை அடைகிறேன்.

(3) உன் திருவடிகளை, சிலம்பு மறையும்வரை உயர்ந்த மணமுள்ள மலர்களால் அர்ச்சிக்கின்றனர். ஆயின் மணம் பெறுவது மலர்களே. தினமும் சேவிக்கிறேன். புதியவைகளாகவே யிருக்கின்றன. கண்களுக்கினிய அத்தகைய உன் திருவடிகளைச் சரணமடைகிறேன்.

सद्योविकासिसमुदित्वरसान्द्रराग सौरभ्यनिर्भरसरोरुहसाम्यवार्ताम् ।
सम्यक्षु साहसपदेषु विलेखयन्तौ श्रीवेङ्कटेश चरणौ शरणं प्रपद्ये ॥

ஸத்யோ விகாஸி ஸமுதித்வர ஸாந்த்ர ராக-
ஸௌரப்ய நிர்பர ஸரோருஹ ஸாம்ய வார்த்தாம் |
ஸம்யக்ஷு ஸாஹஸபதேஷு விலேகயந்தௌ
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே || 4

रेखामयध्वजसुधाकलशातपत्र वज्राङ्कुशाम्बुरुहकल्पकशङ्खचक्रैः ।
भव्यैरलङ्कृततलौ परतत्त्वचिह्नैः श्रीवेङ्कटेश चरणौ शरणं प्रपद्ये ॥

ரேகாமய த்வஜ ஸுதா கலசாதபத்ர-
வஜ்ராங்குசாம்புருஹ கல்பக சங்க சக்ரைஃ |
பவ்யைரலங்க்ருத தலௌ பரதத்வ சிஹ்நைஃ
ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே || 5

ताम्रोदरद्युतिपराजितपद्मरागौ बाह्यैर्महोभिरभिभूतमहेन्द्रनीलौ ।
उद्यन्नखांशुभिरुदस्तशशाङ्कभासौ श्रीवेङ्कटेश चरणौ शरणं प्रपद्ये ॥

தாம்ரோதர த்யுதி பராஜித பத்மராகௌ
பாஹ்யைர் மஹோபிரபிபூத மஹேந்த்ர நீலௌ |
உத்யந் நகாம்சுபி ருதஸ்த சசாங்க பாஸௌ
ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே || 6

सप्रेमभीति कमलाकरपल्लवाभ्यां संवाहनेऽपि सपदि क्लममादधानौ ।
कान्ताववाङ्मनसगोचरसौकुमार्यौ श्रीवेङ्कटेश चरणौ शरणं प्रपद्ये ॥

ஸப்ரேமபீதி கமலா கரபல்லவாப்யாம்
ஸம்வாஹநேபி ஸபதி க்லம மாததாநௌ |
காந்தாவவாங்மநஸகோசரஸௌகுமார்யௌ
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே || 7

(4) தாமரைமலர்கள் மலர்களுள் உயர்ந்தவைகளாக யிருக்கலாம். ஆயினும் அவை திருவடிகளுக்கு இணையாகத் தக்கவையல்ல. இணையாகச் சொல்வது பெரும் ஸாஹஸம் விவேகமற்ற செயல்.

(5) நீயே பரம்பொருள் என்பதற்கு உன் திருவடித் தலங்களில் அமைந்திருக்கும் சங்கரேகை சக்ரரேகை முதலி யவைகளே சான்று. இவை வேறெங்கும் நிறைந்திரா.

(6) உன் உள்ளங்கால்கள் பத்மராகக் கற்களைக் காட்டிலும் சிவந்திருக்கின்றன. புறங்கால்கள் இந்த்ர நீலக்கற்களைக் காட்டிலும் கறுத்திருக்கின்றன. நகங்கள் சந்த்ரகாந்திகளினும் அழகுற்று வெண்மையாய் விளங்கு கின்றன. இத்தகைய சோபை, நீயே பரம் பொருள் என எளிதில் விளக்கும்.

(7) த்ரிவிக்ரமாவதாரத்தில் உன் திருவடிகள் உலகையளந்தன. இராமன் முதலிய அவதாரங்களில் காடுகளிலும் மலைகளிலும் திரிந்துள்ளன. அத்தகைய உன் திருவடிகள், தளிர்போன்ற தன் கைகளால் திருமகள் பரிவுடன் வருடும் பொழுது, வாடிவதங்கும் மென்மை யைக் காட்டுகின்றன. என்னே! கல்லினும் கடுமை. மலரி னும் மென்மை!

लक्ष्मीमहीतदनुरूपनिजानुभाव नीलादिदिव्यमहिषीकरपल्लवानाम् ।
आरुण्यसंक्रमणतः किल सान्द्ररागौ श्रीवेङ्कटेश चरणौ शरणं प्रपद्ये ॥

லக்ஷ்மீ மஹீ ததநுரூப நிஜாநுபாவ-
நீலாதி திவ்யமஹிஷீ கரபல்லவாநாம் ।
ஆருண்ய ஸங்க்ரமணத꞉ கில ஸாந்த்ரராகௌ
ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே || 8

नित्यानमद्विधिशिवादिकिरीटकोटि प्रत्युप्तदीप्तनवरत्नमहःप्ररोहैः ।
नीराजनाविधिमुदारमुपाददानौ श्रीवेङ्कटेश चरणौ शरणं प्रपद्ये ॥

நித்யாநமத் விதி ஶிவாதி கிரீட கோடி-
ப்ரத்யுப்த தீப்த நவரத்ந மஹ꞉ப்ரரோஹை꞉ ।
நீராஜநா விதி முதாரமுபாததாநௌ
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே || 9

विष्णोः पदे परम इत्युदितप्रशंसौ यौ मध्व उत्स इति भोग्यतयाऽप्युपात्तौ ।
भूयस्तथेति तव पाणितलप्रदिष्टौ श्रीवेङ्कटेश चरणौ शरणं प्रपद्ये ॥

விஷ்ணோ꞉ பதே பரம இத்யுதிதப்ரசம்ஸௌ
யௌ மத்வ உத்ஸ இதி போக்யதயாப்யுபாத்தௌ
பூயஸ்ததேதி தவ பாணிதலப்ரதிஷ்டௌ
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே || 10

पार्थाय तत्सदृशसारथिना त्वयैव यौ दर्शितौ स्वचरणौ शरणं व्रजेति ।
भूयोऽपि मह्यमिह तौ करदर्शितौ ते श्रीवेङ्कटेश चरणौ शरणं प्रपद्ये ॥

பார்த்தாய தத்ஸத்ருச ஸாரதிநா த்வயைவ
யௌ தர்ஶிதௌ ஸ்வசரணௌ சரணம் வ்ரஜேதி ।
பூயோபி மஹ்யமிஹ தௌ கரதர்ஶிதௌ தே
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே || 11

(8) திருமகளும் மணமகளும் மற்றுமுள்ள நப்பின்னை முதலியவர்களும் அன்போடு உன் திருவடிகளைப் பற்றி விடுவதால் அவர்கள் திருக்கைகளிலுள்ள செந்நிறம் உன் திருவடிகளில் கலந்துவிட்டதா? திருக்கைகள் தளிர்போன்றவை. திருவடிகள் மலர்போன்றவை. இடை விடாது தனித்தனியேயும் சேர்ந்தும் பரிவுடன் பற்றிவிடுகின்றனர். ஆதலின் கலந்து மிருக்கலாம்.

(9) அயன் அரன் முதலிய தேவர்கள் எப்பொழுதும் இடைவிடாது தலைவணங்கி உன் திருவடிகளைத் தொழுகின்றனர். அவர்கள் தலைகளில் அணியப்பெற்ற கிரீடங்களில் உயர்ந்த ஒளியுள்ள நவரத்னங்கள் பதிக்கப் பெற்றுள்ளன. அக்கற்களின் காந்திகள் விதைகளிலிருந்து முளைகள் முளைப்பது போல் விளங்குகின்றன. அவை உன் திருவடிகளுக்குத் தீபஹாரத்தி செய்வதுபோல் காணப்படுகின்றன. (எம்பெருமான் திருக்கோயிலுக்கு நல்ல ஆடையணிகள் அணிந்து சுத்தமாய்ச் செல்லவேண்டும். பணிவுடன் நின்று விடாமல் ஏதாவது ஒரு தொண்டு செய்யவேண்டும். அவ்வாறு செய்யத் தவறிவிடினும் கருணைக் கடலான கடவுள் ஏதேனும் ஒரு வகையில் நம்மிடமிருந்து தொண்டைப் பெறுகிறான் என்பது உட்கருத்து).

(10) எம்பெருமான் திருவடிகளின் பெருமை உபநிஷத்துக்களில் கூறப்படுகிறது. பரமபதம் சென்றவர்களும் அங்கும் அத்திருவடிகளுக்குக் கைங்கர்யம் செய்தே பேரின்பம் பெறுகின்றனர். ஆதலின் இம்மையிலும் மறுமையிலும் அத்திருவடிகளே நமக்குக்கதி என்று ஸ்ரீநிவாசன் தனது வலது திருக்கையால் காண்பிக்கின்றான்.

(11) கண்ணன் அர்ஜுனனுக்கு "மாமேகம் சரணம் வ்ரஜ" என்று கீதையில் உபதேசித்துள்ளான். 'என்னை சரணம் அடை' என்றே பொருள் வெளிப்படையில் தோன்றும். உண்மையில் "என் திருவடிகளைச் சரணம் அடை" என்றே அவ்வாக்கியத்திற்குப் பொருள். கண்ணனும் ஸ்ரீநிவாஸனும் ஒருவனேதான். அர்ஜுனனுக்குக் கீதையில் உபதேசித்தப் பொருளையே இத்திருமலையில் திருவேங்கடவனாய் நின்று தன் வலது திருக்கையால் காண்பிக்கின்றான்.

मन्मूर्ध्नि कालियफणे विकटाटवीषु श्रीवेङ्कटाद्रिशिखरे शिरसि श्रुतीनाम् ।
चित्तेऽप्यनन्यमनसां सममाहितौ ते श्रीवेङ्कटेश चरणौ शरणं प्रपद्ये ॥

மந்மூர்த்நி காலியபணே விகடாடவீஷு
ஸ்ரீ வேங்கடாத்ரிசிகரே சிரஸி ச்ருதிநாம் |
சித்தேப்யநந்யமநஸாம் ஸமமாஹிதெள தே
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே || 12

अम्लानहृष्यदवनीतलकीर्णपुष्पौ श्रीवेङ्कटाद्रिशिखराभरणायमानौ ।
आनन्दिताखिलमनोनयनौ तवैतौ श्रीवेङ्कटेश चरणौ शरणं प्रपद्ये ॥

அம்லாந ஹ்ருஷ்யதவநீதல கீர்ண புஷ்பௌ
ஸ்ரீ வேங்கடாத்ரி சிகராபர ணாயமாநௌ |
ஆநந்திதாகில மநோ நயநௌ தவைதௌ
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே || 13

प्रायः प्रपन्नजनताप्रथमावगाह्यौ मातुस्स्तनाविव शिशोरमृतायमानौ ।
प्राप्तौ परस्परतुलामतुलान्तरौ ते श्रीवेङ्कटेश चरणौ शरणं प्रपद्ये ॥

ப்ராயஃ ப்ரபந்ந ஜநதா ப்ரதமாவகாஹ்யௌ
மாதுஃ ஸ்தநாவிவ சிசோ ரம்ருதாயமாநௌ |
ப்ராப்தௌ பரஸ்பர துலா மதுலாந்தரௌ தே
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே || 14

सत्त्वोत्तरैस्सततसेव्यपदाम्बुजेन संसारतारकदयार्द्रदृगञ्चलेन ।
सौम्योपयन्तृमुनिना मम दर्शितौ ते श्रीवेङ्कटेश चरणौ शरणं प्रपद्ये ॥

ஸத்வோத்தரைஸ் ஸதத ஸேவ்ய பதாம்புஜேந
ஸம்ஸார தாரக தயார்த்ர த்ருகஞ்சலேந
ஸௌம்யோபயந்த்ருமுநிநா மம தர்சிதௌ தே
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே || 15

(12) இராமனாகவும் கிருஷ்ணனாகவும் அவதரித்தவன் இத்திருவேங்கடமுடையானே. வேதங்களில் கூறப்பெறும் பரம்பொருளும் இத்திருவேங்கடமுடையானே. பரம் பொருள் என்று பெரியவர்களும் தீர்மானம் செய்து தங்கள் மனத்தில் நிலைபெற நிறுத்தித் தியானிக்கின்றனர். நாமும் அவனைத் தொழுதால் உய்யமுடியும்.

(13) தேவர்களும் பிறரும் எண்ணிறந்த மலர்களை இறைவன் திருவடிகளில் சேர்க்கின்றனர். அங்கு இடம் பெறாது அம்மலர்கள் தரையில் இறைகின்றன. இறைவன் இணையடி சம்பந்தம் பெற்றமையால் அம்மலர்கள் வாடுவதில்லை. மலர்ந்து விளங்குகின்றன. இறைவன் திருவடிகள் மலைக்கு ஒப்பற்ற அணிகளாய் விளங்குகின்றன. பக்தர்கள் அனைவரும் கண்களாரக்கண்டு மனமாரக் களிக்கின்றனர்.

(14) இறைவன் திருவடிகள் தங்களுக்குள் தாம் இணையாகுமேயன்றி வேறு இணையில்லாதவை. தாயின் முலைப்பாலைப் பெற்ற குழந்தைபோல் பக்தர்கள் இவ்விணையடிகளைப் பெற்று மகிழ்கின்றனர். ஆதலின் எவரும் திருவடிகளுக்குத் தொண்டு புரிவதையே முதலில் விரும்புகின்றனர்.

(15) பெரியவர்களால் வணங்கத்தக்கவரும் கருணைக் கடலுமாகிய ஸ்ரீமணவாள மாமுனிகளால் உன் திருவடிகளே உலகோர்க்குற்றதுணை என்று எனக்கு (இக்கவிக்குக் காண்பிக்கப் பெற்றன.

श्रीश श्रिया घटिकया त्वदुपायभावे प्राप्ये त्वयि स्वयमुपेयतया स्फुरन्त्या ।
नित्याश्रिताय निरवद्यगुणाय तुभ्यं स्यां किङ्करो वृषगिरिश न जातु मह्यम् ।।

ஸ்ரீச ச்ரியா கடிகயா த்வதுபாயபாவே
ப்ராப்யே த்வயி ஸ்வயமுபேயதயா ஸ்புரந்த்யா ।
நித்யாச்ரிதாய நிரவத்யகுணாய துப்யம்
ஸ்யாம் கிங்கரோ வ்ருஷகிரீச ந ஜாது மஹ்யம் ॥ 16

।। वेङ्कटेशप्रपत्तिः ।।

(16) நாம் இறைவன் திருவருளுக்குப் பாத்திர ஆகும்படி செய்பவள் திருமகள். பிறவிக் கடலைக் கடப்ப தற்குக் காரணமாயிருப்பவன் திருமால். பரமபதமடைந்த பிறகு நாம் அத்திவ்ய தம்பதிகளுக்குத் தொண்டு செய்து மகிழ்கிறோம். நாம் எப்பொழுதும் பரம புருஷனுக்கடிமை சுதந்திரர்களல்லோம்.

ஸ்ரீ வேங்கடேச ப்ரபத்தி முற்றிற்று.



श्रीः

# ॥ श्रीवेङ्कटेशमङ्गलाशासनम् ॥

श्रियःकान्ताय कल्याणनिधये निधयेऽर्थिनाम् ।
श्रीवेङ्कटनिवासाय श्रीनिवासाय मङ्गलम् ॥

ஶ்ரிய: காந்தாய கல்யாண நிதயே நிதயேர்த்திநாம் ।
ஶ்ரீ வேங்கட நிவாஸாய ஶ்ரீநிவாஸாய மங்களம்॥ 1

लक्ष्मीसविभ्रमालोकसुभ्रूविभ्रमचक्षुषे ।
चक्षुषे सर्वलोकानां वेङ्कटेशाय मङ्गलम् ॥

லக்ஷ்மீ ஸவிப்ரமாலோக ஸுப்ரூ விப்ரம சக்ஷுஷே ।
சக்ஷுஷே ஸர்வலோகாநாம் வேங்கடேசாய மங்களம் ॥ 2

श्रीवेङ्कटाद्रिशृङ्गाग्रमङ्गलाभरणाङ्घ्रये ।
मङ्गलानां निवासाय वेङ्कटेशाय मङ्गलम् ॥

ஶ்ரீ வேங்கடாத்ரி ச்ருங்காக்ர மங்களாபரணங்க்ரயே ।
மங்களாநாம் நிவாஸாய வேங்கடேசாய மங்களம் ॥ 3

सर्वावयवसौन्दर्यसंपदा सर्वचेतसाम् ।
सदा संमोहनायास्तु वेङ्कटेशाय मङ्गलम् ॥

ஸர்வாவயவ ஸௌந்தர்ய ஸம்பதா ஸர்வசேதஸாம் ।
ஸதா ஸம்மோஹநாயாஸ்து வேங்கடேசாய மங்களம் ॥ 4

ஸ்ரீ:

# ஸ்ரீவேங்கடேச மங்களாசாஸனம்.

(1) திருவேங்கட மலையில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் எம்பெருமானுக்கு எல்லா மங்களங்களும் உண்டாகட்டும். ஒரு குறைவுமின்றி அவ்வெம்பெருமான் எழுந்தருளியிருக்கும்வரை நாம் எல்லா மங்களங்களையும் அடைய முடியும். கோரிய பலன்களைக் குறைவின்றிப் பெற முடியும்.

(2) கமலையுங்கண்டு காமுறக் கூடிய கண்ணழகு படைத்த திருவேங்கடமுடையான் உண்மையில் உலகோர்க்குக் கண்ணாகவே இருக்கின்றான். கண்ணில்லையேல் உலக மிருண்டுவிடும் என்பதை நாமறிவோம். கடவுளில்லையெனினும் உலகம் அழிந்துவிடும். ஆதலின் கடவுளர் கடவுளாகிய திருவேங்கடமுடையானுக்கு எல்லா மங்களமும் உண்டாகட்டும்.

(3) திருவேங்கடமுடையான் திருவடிகள் திருமலையின் சிகரத்திற்கே ஓர் அழகிய ஆபரணமாய் விளங்குகின்றன. திருமலைக்கே ஒரு திவ்ய சக்தியை அளிக்கின்றன. அத்தகைய திருவேங்கடமுடையானுக்கு எல்லா மங்களமும் உண்டாகட்டும்.

(4) திருவேங்கடமுடையான் திருமேனியின் திருவழகைக்கண்டு மயங்காதார் இல்லை. ஆண் பெண் வேற்றுமையின்றி அனைவரும் அவனழகில் மயங்கியவரே. கண்ணெச்சிலின்றி அக்கடவுளுக்கு எல்லா மங்களங்களும் உண்டாகட்டும்.

नित्याय निरवद्याय सत्यानन्तचिदात्मने ।
सर्वान्तरात्मने श्रीमद्वेङ्कटेशाय मङ्गलम् ॥

நித்யாய நிரவத்யாய ஸத்யாநந்தசிதாத்மநே ।
ஸர்வாந்தராத்மநே ஸ்ரீமத் வேங்கடேசாய மங்களம் ॥ 5

स्वतस्सर्वविदे सर्वशक्तये सर्वशेषिणे ।
सुलभाय सुशीलाय वेङ्कटेशाय मङ्गलम् ॥

ஸ்வதஸ்ஸர்வவிதே ஸர்வ சக்தயே ஸர்வசேஷிணே ।
ஸுலபாய ஸுசீலாய வேங்கடேசாய மங்களம் ॥ 6

परस्मै ब्रह्मणे पूणकामाय परमात्मने ।
प्रयुञ्जे परतत्त्वाय वेङ्कटेशाय मङ्गलम् ॥

பரஸ்மை ப்ரஹ்மணே பூர்ணகாமாய பரமாத்மநே ।
*ப்ரயுஞ்ஜே பரதத்வாய வேங்கடேசாய மங்களம் ॥ 7

आकालतत्त्वमश्रान्तमात्मनामनुपश्यताम् ।
अतृप्त्यमृतरूपाय वेङ्कटेशाय मङ्गलम् ॥

ஆகால தத்வ மச்ராந்த மாத்மநா மநுபச்யதாம் ।
அத்ருப்த்யம்ருதரூபாய வேங்கடேசாய மங்களம் ॥ 8

(5) ஸத்யத்வம், ஜ்ஞாநத்வம், அநந்தத்வம், அமலத்வம், ஆநந்தத்வம் என்ற ஐந்து குணங்களுடன் கூடியதாக உபநிஷத்துக்களில் கூறப்படும் பரப்ரஹ்மமே திருவேங்கடமுடையான். எல்லாருள்ளத்துள்ளும் உறைந்து நிற்கும் கடவுளே திருவேங்கடமுடையான். அவனுக்கு எல்லா மங்களமும் உண்டாகட்டும்.

(6) எம்பெருமான் இயற்கையில் எல்லாமறிந்தவன்; எல்லாம் வல்லவன்; எல்லோருக்கும் இறைவன். ஆயினும் தன் பெருமையை மறந்து எளியவரிடத்து இசைந்து பழகுவான். (எளியவர் தன்னை அணுகிப்பழக இடமளிப்பான்) அத்தகைய பரம்பொருளுக்கு எல்லா மங்களங்களும் உண்டாகட்டும்.

(7) உபநிஷத்துக்கள் எங்கெங்கு 'பரம் ப்ரஹ்ம' என்ற சொல்லை உபயோகிக்கின்றனவோ அங்கங்குத் திருமாலை (திருவேங்கடமுடையானை) கருத்தில் கொண்டே அவ்வாறு கூறுகின்றன. அவன் விரும்பி அடைய முடியாதது உலகத்தில் இல்லை. உலகத்தில் உள்ள ஒவ்வொன்றும் அவன் கட்டளையைப் பின் பற்றியே தன் தன் காரியங்களைச் செய்ய முடியும். அவன் ஆணையின்றி அணுவும் அசையாது. அத்தகைய திருவேங்கடமுடையானுக்கு மங்களமும் உண்டாகட்டும்.

1. *'ப்ரயுஞ்ஜே' என்ற பாடம் பல இடங்களில் காணப்படுகின்றது. அப்பொழுது 'மங்களம்' என்றசொல்லை இரண்டாம் வேற்றுமையாக்கி மங்களத்தை என்று பொருள் சொல்லி 'ப்ரயுஞ்ஜே' என்பதை வினையாக்கிக் 'கூறுகிறேன்' என்ற பொருளைக் கூறிக்கொள்ளவும்.

(8) திருவேங்கடமுடையானுடைய திவ்ய மங்கள விக்ரஹ ஸௌந்தர்யத்திலும் திவ்யாத்மஸ்வரூபத்திலும் திவ்ய குணங்களிலும் ஈடுபட்டு அனுபவிப்பவர்களில் போதுமென்று திருப்தியடைந்தவர் இதுவரை இருந்த தில்லை. இப்பொழுதும் இல்லை. இனியும் இருக்க முடியாது. அத்தகைய திருவேங்கடமுடையானுக்கு எல்லா மங்களங்களும் உண்டாகட்டும்.

प्रायस्स्वचरणौ पुंसां शरण्यत्वेन पाणिना ।
कृपायऽऽदिशते श्रीमद्वेङ्कटेशाय मङ्गलम् ।।

ப்ராயஸ் ஸ்வசரணௌ பும்ஸாம் சரண்யத்வேந பாணிநா
க்ருபாய திசதே ஸ்ரீமத் வேங்கடேசாய மங்களம் || 9

दयामृततरङ्गिण्याः तरङ्गैरिव शीतलैः ।
अपाङ्गैः सिञ्चते विश्वं वेङ्कटेशाय मङ्गलम् ।।

தயாம்ருத தரங்கிண்யாஸ் தரங்கைரிவ சீதலை |
அபாங்கைঃ ஸிஞ்சதே விச்வம் வேங்கடேசாய மங்களம் || 10

स्रग्भूषाम्बरहेतीनां सुषमावहमूर्तये ।
सर्वार्तिशमनायास्तु वेङ्कटेशाय मङ्गलम् ।।

ஸ்ரக்பூஷாம்பரஹேதீநாம் ஸுஷமாவஹமூர்த்தயே |
ஸர்வார்த்தி சமநாயாஸ்து வேங்கடேசாய மங்களம் || 11

श्रीवैकुण्ठविरक्ताय स्वामिपुष्करिणीतटे ।
रमया रममाणाय वेङ्कटेशाय मङ्गलम् ।।

ஸ்ரீவைகுண்டவிரக்தாய ஸ்வாமிபுஷ்கரிணீதடே |
ரமயா ரமமாணாய வேங்கடேசாய மங்களம் || 12

(9) திருமலையில் எழுந்தருளியிருக்கும் திருவேங்கடமுடையான் தன் வலது திருக்கையை முன்புறமாகக் கீழ் நோக்கி வைத்துக் கொண்டிருக்கின்றான். இத் திருவடிகளே உங்களனைவர்க்கும் கதியென்று காண்பிப்பது போல் அது தோன்றுகிறது. உண்மையை அன்புடன் உலகோர்க்குணர்த்தும் உத்தம புருஷனாகிய திருவேங்கடமுடையானுக்கு எல்லா மங்களங்களும் உண்டாகட்டும்.

(10) திருவேங்கடமுடையான் தண்ணிய தன் கடைக் கண்களால் உலகத்தைக் கடாக்ஷிக்கிறான். அலை நிறைந்த அம்ருத நதியில் அமிழ்ந்தெழுந்தது போல் உலகம் களிக்கின்றது. அத்தகைய திருவேங்கடமுடையானுக்கு எல்லா மங்களங்களும் உண்டாகட்டும்.

(11) பூமாலை முதலியவைகளைச் சாத்திக் கொள்வதால் திருவேங்கடமுடையானுடைய திருமேனிக்கு என்றுமில்லாத புதுஅழகு ஏற்படுவதாக நினைப்பது தவறு. திருமேனி சம்பந்தம்பெற்று உய்ந்து போவதுபோல அழகை மாலை முதலியவைகள் பெறுகின்றன. எல்லோருடைய கஷ்டங்களையும் தீர்க்கும் எம்பெருமான் தன் திருமேனியின் சோபையில் ஒருசிறுபகுதியைக் கொடுத்து மாலை முதலியவைகளின் வருத்தத்தைத் தீர்ப்பதும் முறை தான். அத்தகைய திருவேங்கடமுடையானுக்கு எல்லா மங்களங்களும் உண்டாகட்டும்.

(12) பரமபதத்தில் பரவாஸுதேவன் உருவத்தில் இருந்து கொண்டு பக்தரக்ஷணம் எனும் தன்காரியத்தை நன்கு நிறைவேற்ற இயலாமல், எம்பெருமான் திருமலையில் ஸ்வாமி புஷ்கரிணீ தீரத்தில் திருவேங்கடமுடையான் உருவத்தில் அர்ச்சையாய் எழுந்தருளியிருந்து பக்தரக்ஷணம் எனும் காரியத்தையும் நன்கு நிறைவேற்றுகிறான் எனின், பரமபதத்தினும் திருமலையின் சிறப்பு நன்கு விளங்குகின்றது. ஸ்ரீ மஹாலக்ஷ்மி திருமலையில் தனிக் கோயில் கொண்டிராமல் திருவேங்கடமுடையான் திருமார்பையே தன் கோயிலாக அமைத்துக் கொண்டாள். ஆகவே, ஆழ்வாரும் ‘ அலர்மேல் மங்கையுறை மார்பன்’ என்று அருளிச்செய்துள்ளார். அத்தகைய திருவேங்கடமுடையானுக்கு எல்லா மங்களங்களும் உண்டாகட்டும்.

श्रीमत्सुन्दरजामातृमुनिमानसवासिने ।
सर्वलोकनिवासाय श्रीनिवासाय मङ्गलम् ॥

ஶ்ரீமத் ஸுந்தர ஜாமாத்ரு முநி மாநஸ வாஸிநே ।
ஸர்வ லோக நிவாஸாய ஶ்ரீநிவாஸாய மங்களம் ॥ 13

मङ्गलाशासनपरैः मदाचार्यपुरोगमैः ।
सर्वैश्च पूर्वैरचार्यैस्सत्कृतायास्तु मङ्गलम् ॥

மங்களாசாஸநபரைர் மதாசார்ய புரோகமை: ।
ஸர்வைஸ்ச பூர்வைராசார்யைஸ் ஸத்க்ருதாயாஸ்து மங்களம் ॥ 14

॥ इति श्रीवेङ्कटेशसुप्रभातम् ॥



(13) ஒவ்வொரு பொருளிலும் உள்ளும் புறமும் உறைந்து நிற்கும் உத்தமன் உத்தம பாகவதர்களின் திருவுள்ளத்தில் உவகையுடன் உறைகின்றான். அத்தகைய திருவேங்கடமுடையானுக்கு எல்லா மங்களங்களும் உண்டாகட்டும்.

(14) என் ஆசார்யர்கள் அவர்களுடைய ஆசார்யர்கள் முதலியவர்களாலும் பிற ஆசார்யர்களாலும் இத் திருவேங்கடமுடையான் ஸ்தோத்ரம் செய்யப்பட்டிருக்கிறான். நான் புகழ்வதே புதிதன்று. இவ்வெம்பெருமானைத் தொழாதவர்களேயில்லை. அத்தகைய ஸ்ரீ திருவேங்கடமுடையானுக்கு எல்லா மங்களங்களும் உண்டாகட்டும்.

ஸ்ரீ வேங்கடேச மங்களாசாஸனம் முற்றிற்று.



